சத்குரவே நம :



களப்பாள்

# சிவக்ஷேத்திர விளக்கம்



திருக்களர்-தி.மு. சுவாமிநாத உபாத்தியாயரால்

எழுதப்பட்டது

களப்பாள்

ஸ்ரீமாந் S. இரங்கசாமி முதலியாரவர்கள்

பொருளுதவியால்

சென்னை

" கார்டியன் பிரஸில் " பதிப்பிக்கப்பட்டது.

1911

சிவமயம்

# களப்பாள் சிவக்ஷேத்திர விளக்கம்

அத்தி முகனடி நித்த நினைபவர்
சித்தி திருவொடு முத்தி பெறுவரே.

## மூர்த்தி வரலாறு

### திருச்சிற்றம்பலம்

அநாதிமல முத்தராய், நித்தியராய், வியாபகராய், எல்லாவறிவும் எல்லா முதன்மையும் எல்லா வநுக்கிரகமு முடையராய், ஆன்மாக்களிடத்தே பதிந்த மைம்மா றற்ற பெருங்கருணையினாலே படைத்தல், காத்தல், அழித் தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களையும் இயற்றுதியற்றும் முழுமுதற்கடவுளாகிய நமது பரமேஸ் வரன் தமது அடியார்களுடைய பக்குவாபக்குவத்துக் குத் தக்கபடி சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சிய பதங் களை யளித்தாள்வதற்கான திருவுருவுட னெழுந்தருளி யிருக்கின்ற சிவதலங்கள் பலவற்றுள்ளே (சோழவள நாட்டிலே காவிரிநதிக்குத் தெற்கிலே) திருஞானப்பதிகம்

பெற்று விளங்காநின்ற திருக்களரியிலே என்று வந் தாய், என்னவேண்டும், குஞ்சிதபாத நிழலிலிரு என்னுங் குறிப்புகளோடு நின்றருளாநின்ற பஞ்ச கிருத்திய பரமா னந்த ஸ்ரீ சபாநாயகப் பெருமான் (துருவாச முனிவருக் காக) பாத்மகற்பத்திலே மாசிமாசத்துப் பௌர்ணிமி தொடங்கி முந்நூற்றறுபத்தைந்து வருஷம் நடித் தருளிய ஆநந்தத் தாண்டவ தரிசனத்திற்கும் பின் பொருகாலத்திலும் செந்தாமரைக்கண் முதல் திருக் கோட்டூர் வரையில் திருக்களரியைச் சுற்றி ஐந்து கூப் பிடுதூரம் நிறைந்திருந்து தங்கள் தங்கள் பெயரால் தனித்தனிச் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து பூசித்த

---

## திருக்களர்ப் புராணம்

“ அருமறை வியாதன் கண்ணுவன் பராத்து
வாசன்பார்க் கவனெனும் பெரியோன்
பெரியபிங் கலன்கார்க் கியனுவ மனியன்
பிருதுசு கோத்திரன் பிரமன்
றருமகத் தியன்மாத் தியந்தனன் மங்கு
சதசிரன் பிராதிருத் தகைசேர்
கிருதுசங் கிருதி யுசிநரன் றிருவன்
மவுனபார்க் கவனெனக் கிளந்தோர்.
அத்திரி யேக நேத்திரன் றால
லோசன னங்கிரா விரத

வித்தகம் புரியுஞ் சங்குமா தவனிங்
கிவர்தமா ளுக்கரும் விரவி
நித்திலம் வயல்சூழ் களநந்தையி னளவுஞ்
சாலைகள் புடைதொறு நெருங்கப
பத்தியி னியற்றிச் சுற்றொரு குரோசப
பரப்புற மருவினர் பரிவால்

## வேறு

பொன்னிலங் காவல் பூண்ட புரந்தரன் முதலா மறறை
வின்மணி மவுலி வானோ ரனைவரும் வியாத ஞாதி
நன்முனி வரரு மேனோ ணற்றரு வனத்தி னண்ணி
நின்மலன் றிருத்தாள் போற்றி நித்தலும் பணிந்து பின்னர்.

## வேறு

மண்டி வான்றட வும்பணைக் கற்பக வனநான்
கெண்டி சைக்கட்கு ரோசமைந் துட்பட விலகும்
* புண்ட ரீகமா புர†மயி ராபத புரமட்
டண்டர் மாதவர் யாவரு மேவின ரதன்பால்

அங்கண் மேவியே யான்றிரு வாலய மனந்த
மங்கு லெய்திய மயன்புனைந் தானென வகுத்துச்
செங்கண் மாலயன் றேடருஞ் சிவன்றிரு விலிங்கந்
தங்க ளமைத்தா லியற்றினர் தனித்தனி தவத்தோர்.

அவ்வி லிங்கங்க ளனைத்தையு மாலயந் தோறுஞ்
சைவ நூன்முறை பதிட்டைசெய் தவரவர் தகவாற்

* புண்டரீகமாபுரம்-செந்தாமரைக்கண்
† அயிராபதபுரம்-திருக்கோட்டூர்

செவ்வி நாண்மலர் தூய்த்தொழு தாங்கவர் தீய
வெவ்வி னைப்பவம் வீட்டினர் வீடுபெற் றுய்ந்தார்."

என்றபடி வியாதர், கண்ணுவர், பாரத்துவாசர், பார்க்கவர், பிங்கலர், கார்க்கியர், உபமன்னியர், பிருது, சுகோத்திரர், அகத்தியர், மாத்தியந்தினர், சதகிரர், உசிநரர், திருவர், மனுபார்க்கவர், அத்திரி, ஏகநேத்திரர், தூலலோசனர், அங்கிராவிரதர், சங்கு, நாரதர், இந்திரன், சந்திரன், சூரியன், ஆதிசேடன், முதலியோர்களில் (திருக்களரிக்கு நிருதி திசையிலே ஒரு கூப்பிடு தூரத்திலே ஆதித்தபுரம், இந்திரபுரம், கைலாசபுரம், ஆதிசேடபுரம், நாகநாதபுரம், களந்தை என்னுந் திருநாமங்களோடு விளங்காநின்ற களப்பாட்டபதியிலே தங்கியிருந்தவர்களில்)

**ஆதித் தேச்சுரர்.**—சூரியனால் பிரதிஷ்டை செய்து பூசிக்கப்பெற்றவரும்; பின்பொரு காலத்தில் (சூரிய குலத்தரசனாகிய) இராஜாதித்த சோழனால் பூசை செய்யப் பெற்றவரும் ; பூர்வ சென்மத்தில் தான் சிலம்பியாக விருந்து * சம்புகேச்சுரமென்னுந் தலத்தில், வெண்ணாவல் விருக்ஷத்தினடியில், † அப்பு மயமா யெழுந்தருளியிராநின்ற சிவலிங்கப் பெருமான்மீது, சருகு முதலியன விழாவண்ணம் தடுக்கற்பொருட்டு, தன்னிடம் இயற்கையாயுள்ள, நூலினால் வலை பின்னுதலாகிய, பூசை செய்த

* சம்புகேச்சுரம்-திருவானைக்கா. † அப்பு-ஜலம்.

காலத்தில், அப்பூசை நிறைவுறாதபடி யானை அவ்வலையை அறுத்தெறிதலாகிய இடையூறு செய்ததென்னும், பூர்வவுணர்ச்சியால், யானை கற்பக்கிரகத்துக்குள் புகாதபடி, திருக்கோவில்களைப் புதுப்பிக்க வேண்டுமென்னுங் கருத்துக் கொண்டு, சிதம்பரம், திருவானைக்கா, திருச்சாய்க்காடு, திருவம்பர், திருநன்னிலம், திருவரிக்கல், திருக்கீழ்வேளூர், திருத்தேவூர், திருப்பெருவேளூர், திருப்பூவணம், தஞ்சைப்பிராசராசேச்சரம், கங்கைகொண்ட சோளேச்சர முதலிய திருக்கோவில்களைப் பிடித்து, மாடக்கோவில் கட்டுவித்த கோச்செங்கட்சோழ ‡ நாயனாரால் மாடக்கோவில் கட்டுவிக்கப் பெற்றவரும்; கூற்றுவநாயனாரால் § நித்திய நைமித்திகங்கள் வழுவின்றி நடத்தப் பெற்றவரும்; கோயில் என்னும் சிதம்பரம், கோட்டூரிலுள்ள திருக்கீழ்க் கோட்டூர் மணியம்பலம், திருமுகத் தலைச் சார்ந்த பன்னகத்தெரு பன்னகாபரணேச்சரம், திருப்புவன மென்னுந் திருப்பூவணம், திருச்சாட்டியக்குடி, திருலோக்கி யென்னுந் திரைலோக்கியசுந்தரம், கங்கைகொண்ட சோளேச்சரம், தஞ்சாவூர் பிரகதீச்சரமாகிய தஞ்சைப்பிராசராசேச்சரம், திருவிடைமருதூர் முதலிய தலங்களுக்குத் திருவிசைப்பா அருளிச்செய்த கருவூர்த் தேவர் திருவாய் மலர்ந்தருளிய.

---

‡ இந் நாயனார் கட்டிய கோவில் அறுபத்து நான்கென்பர்.
§ நித்ய நைமித்திகம்-பூசனையும் திருவிழாவும்.

(திருக்களந்தை ஆதித்தேச்சரம்-பண் புறநீர்மை)

" கலைகடம் பொருளு மறிவுமா யென்னைக்
கற்பினிற் பெற்றெடுத் தெனக்கே
முலைகடந் தருளுந் தாயினு நல்ல
முக்கணா னுறைவிடம் போலு
மலைகுடைந் தனைய நெடுநிலை மாட
மருங்கெலா மறையவர் முறையொத்
தலைகடன் முழங்கு மந்தணீர்க் களந்தை
யணிதிக ழாதித்தேச் சரமே. (1)

சந்தன களபந் துதைந்தநன் மேனித்
தவளவெண் பொடிமுழு தாடுஞ்
செந்தழ லுருவிற் பொலிந்துநோக் குடைய
திருநுத லவர்க்கிடம் போலு
மிந்தன விலங்க லெறிபுனந் தீப்பட்
டெரிவதொத் தெழுநிலை மாட
மந்தண ரழலோம் பலைபுனற் களந்தை
யணிதிக ழாதித்தேச் சரமே. (2)

கரியரே யிடந்தான் செய்யரே யொருபாற்
கழுத்திலோர் தனிவடஞ் சேர்த்தி
முரிவரே முனிவர் தம்மொடா னிழற்கீழ்
முறைதெரிந் தோருடம் பினரா
மிருவரே முக்க ணாற்பெருந் தடந்தோ
ளிறைவரே மறைகளுந் தேட
வரியரே யாகி லவரிடங் களந்தை
யணிதிக ழாதித்தேச் சரமே. (3)

பழையராந் தொண்டர்க் கெளியரே மிண்டர்க்
கரியரே பாவியேன் செய்யும்
பிழையெலாம் பொறுத்தென் பிணிபொறுத் தருளாப்
பிச்சரே நச்சரா மிளிருங்
குழையராய் வந்தென் குடிமுழு தாளுங்
குழகரே யொழுகுநீர்க் கங்கை
யழகரே யாகி லவரிடங் களந்தை
யணிதிக ழாதித்தேச் சரமே. (4)

பவளமே மகுடம் பவளமே திருவாய்
பவளமே திருவுடம் பதனிற்
றவளமே களபந் தவளமே புரிநூ
றவளமே முறுவலா டரவந்
துவளுமே கலையுந் துகிலுமே யொருபாற்
றுடியிடை யிடமருங் கொருத்தி
யவளுமே யாகி லவரிடங் களந்தை
யணிதிக ழாதித்தேச் சரமே (5)

நீலமே கண்டம் பவளமே திருவாய்
நித்தில நிரைத்திலங் கினவே
போலுமே முறுவ னிறையவா னந்தம்
பொழியுமே திருமுக மொருவர்
கோலமே யச்சோ வழகிதே யென்று
குழைவரே கண்டவ ருண்ட
தாலமே யாகி லவரிடங் களந்தை
யணிதிக ழாதித்தேச் சரமே. (6)

திக்கடா நினைந்து நெஞ்சிடிந் துருகுந்
திறத்தவர் புறத்திருந் தலச
மைக்கடா வனைய வென்னையாள் விரும்பி
மற்றொரு பிறவியிற் பிறந்து
பொய்க்கடா வண்ணங் காத்தெனக் கருளே
புரியவும் வல்லரே யெல்லே
யக்கடா வாகி லவரிடங் களந்தை
யணிதிக ழாதித்தேச் சரமே. (7)

மெய்யரே மெய்யர்க் கிடுதிரு வான
விளக்கரே யெழுதுகோல் வளையாண்
மையரே வையம் பலிதிரிந் துறைபு
மயானரே யுளங்கலந் திருந்தும்
பொய்யரே பொய்யர்க் கடுத்தவான் பளிங்கின்
பொருள்வழி யிருள்கிழித் தெழுந்த
வையரே யாகி லவரிடங் களந்தை
யணிதிக ழாதித்தேச் சரமே. (8)

குமுதமே திருவாய் குவளையே களமுங்
குழையதே யிருசெவி யொருபால்
விமலமே கலையு முடையரே சடைமேன்
மிளிருமே பொறிவரி நாகங்
கமலமே வதனங் கமலமே நயனங்
கனகமே திருவடி நிலைநீ
ரமலமே யாகி லவரிடங் களந்தை
யணிதிக ழாதித்தேச் சரமே. (9)

நீரணங் கசும்பு கழனிசூழ் களந்தை
நிறைபுக ழாதித்தேச் சரத்து
நாரணன் பரவுந் திருவடி நிலைமே
னலமலி கலைபயில் கருவூ
ராரண மொழிந்த பவளவாய் சுரந்த
வமுதமூ றியதமிழ் மாலை
யோரணங் கிருநான் கிரண்டிவை வல்லோ
ரிருள்கிழித் தெழுந்தசிந் தையரே." (10)

என்னும் திருவிசைப்பாப் பெற்றவரும்; ஸ்ரீ பண்ணி னேர் மொழியாளென்னும் பிரபாநாயகி சமேதரு மாகிய ஸ்ரீ அழகிய நாதரென்னும் ஆதித்தேச்சுரர்.

**கைலாசேச்சுரர்.**—இந்திரன், வீரதேவர், கூற்றுவ நாயனார் முதலியோர் பூசிக்கப் பெற்றவரும்; கைலா சத்திலுள்ளபடி திருநந்திதேவர் முதலிய கணநாதர்க ளோடு எழுந்தருளியவரும்; ஸ்ரீ சௌந்தரவல்லி சமேத ருமாகிய ஸ்ரீ கைலாச நாதரென்னும் கைலாசேச்சுரர்.

**நாகநாதேச்சுரர்.**—ஆதிசேஷன், கூற்றுவ நாயனார் முதலியோர் பூசிக்கப் பெற்றவரும்; (வயி) அருணுசலச் செட்டியாரவர்களால் புதுக்கிக் கட்டப்பட்ட கோவிலை யுடையவரும்; ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி சமேதருமாகிய ஸ்ரீ நாகநாதேச்சுரர்.

முதலிய மூர்த்திகள் எழுந்தருளியிருக்கின்ற திருக்

கோவில்களைப் புதுக்கிக் கட்டுவோர் இம்மையில் குறைவற்ற செல்வத்தையும் மறுமையில் கைலாச பதத்தையுமடைவர்.

முற்கூறிய மூர்த்திகளுக்குக் கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ என்னும் நால்வகைப் புஷ்பங்கள் உண்டாகக்கூடிய திரு * நந்தனவனம் வைப்போர் குபேரபதம் பெறுவர்.

" பசுவானது சிவபெருமானுடைய திருவருளினாலே, திருப்பாற்கடலில் இருந்து, சிவபூசையின்பொருட்டு, பூமியில் உற்பவித்த, கபில நிறமுடைய நந்தை, கருநிறமுடைய பத்திரை, வெண்ணிறமுடைய சுரபி, புகை நிறமுடைய சுசீலை, செந்நிறமுடைய சுமனை, என்னும் ஐவகைப் பசுக்களின் குலமானதாலும்; சிரசில் சிவபெருமானும், அடிக்கொம்பில் பிரம விஷ்ணுக்களும், நடுநெற்றியில் உமாதேவியும், நுனிக்கொம்பில் கோதாவரி முதலிய தீர்த்தங்களும் சராசரங்களும், மேல் நாசியில் முருகக் கடவுளும், உள் நாசியில் நாகேசரும், காதுகளில் அசுவனி தேவரும், கண்களில் சந்திரசூரியரும், பல்லில் வாயுவும், நாவில் வருணனும், ஊங்காரத்தில் சரசுவதியும், இருதயத்தில் இயமனும், கெண்டைத் தலத்தில் இயக்கர்களும், உதட்டில் உதயாஸ்தமயன சந்

*நந்தனவனம் வைக்குமுறை திருக்களர்ச் சாரசங்கிரகத்திற் காண்க.

திகளும், கழுத்தில் இந்திரனும், † திமிலில் அருக்கர்களும், மார்பில் சாத்தியரும், கால்களில் அனிலவாயுவும், முழந்தாள்களில் மருத்துவரும், நுனிக் ‡ குரத்தில் நாகலோகத்தாரும், நடுக்குரத்தில் கந்தருவரும், மேற்குரத்தில் தேவமாதர்களும், முதுகில் உருத்திரரும், சந்திகளில் வசுக்களும், அரைப்பலகையில் பிதிர்க்களும், § பகத்தில் சத்தமாதர்களும், அபானத்தில் இலக்குமியும், அடிவாலில் நாகேசரும், வால்மயிரில் சூரியனொளியும், மூத்திரத்தில் கங்கையும், சாணத்தில் யமுனையும், உரோமத்தில் முனிவர்களும், + உதரத்தில் பூமிதேவியும், முலையில் சமுத்திரமும், வயிற்றில் ஆகவனீயமும், இருதயத்தில் காருகபத்தியமும், முகத்தில் தக்கணாக்கினியும், எலும்பிலும் சுக்கிலத்திலும் யாகங்களும், எல்லா அவயவங்களிலும் கற்புடைமகளிரும் வசிக்கப்பெற்றதானதாலும்; சிவபூஜைக்குப் பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்னும் பஞ்சகவ்வியம் அளிப்பதானதாலும் முற்புகன்ற மூர்த்திகளுக்குப் பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்பன உதவும்பொருட்டுப் பசுவிடுவோரும், திருப்பணியின்பொருட்டுச் சகடத்திற்கு எருது கொடுப்போரும், பசுவிற்குப் புல் தண்ணீர் முதலியன வளிப்போரும், பசு தன் தேகத்திலுண்டாகும் தினவு போக்

† திமில்—மெரி. ‡ குரம்-குளம்பு. § பகம்-பெண்குறி. + உதரம்-கீழ்வயிறு.

கிக்கொள்ள மந்தையில் ஆவுரிஞ்சுகல் நாட்டுவிப்போரும், பசுவிற்குண்டாகும் துன்பத்தைத் நீக்குவோரும் கைலாச மடைவர்.

"மானுடப பிறவி தானும் வகுத்தது மனவாக் காய
மானிடத் தைந்து மாடு மரன்பணிக் காக வன்றோ
வானிடத் தவரு மண்மேல் வந்தரன் றனையர்ச் சிப்ப
ரூனெடுத் துழலு மூம மொன்றையு முணரா ரந்தோ.

வேறு

கண்ணுதலா லயநோக்குங் கண்களே கண்கள்
கறைக்கண்டன் கோயில்புகுங் கால்களே கால்கள்
பெண்ணொருபா கனைப்பணியுந் தலைகளே தலைகள்
பிஞ்ஞகனைப் பூசிக்குங் கைகளே கைகள்
பண்ணவன்றன் சீர்பாடு நன்றாவே நன்றுப
பரன்சரிதை யேகேட்கப் படுஞ்செவியே செவிக
ளண்ணல்பொலங் கழனினைக்கு நெஞ்சமே நெஞ்ச
மவனடிக்கீ ழடிமைபுகு மடிமையே யடிமை"

என்றபடி எள்நெய், "பால் தயிர் நெய் கோசலம் கோமயம்" என்னும் பஞ்சகவ்வியம், அரிசி மாவு, நெல்லிமுள்ளித்தூள், உளுந்துமாவு, பயறுமாவு, கடலைமாவு, கோதுமைமாவு, கஸ்தூரி மஞ்சள்தூள், பால், தயிர், தேன், நெய், சர்க்கரை, "பால் தயிர் நெய் தேன் சர்க்கரை என்பன கூடிய" பஞ்சாமிர்தம், "பஞ்சாமிர்தத்தோடு வாழைப்பழம் மாம்பழம் பலாப்பழம் திராக்ஷைப்பழம் கூடிய" பல

பஞ்சாமிர்தம், எலுமிச்சம்பழச்சாறு, நாரத்தம்பழச்சாறு, கொளிஞ்சிப்பழச்சாறு, பம்பிளிமாஸிச்சுளை, மாதுளம் பழச்சாறு, விளாம்பழச்சத்து, தமர்த்தம்பழச்சாறு, பலாச்சுளை, கருப்பஞ்சாறு, இளநீர், அன்னம், "குங்குமப்பூ கோரோசனை கஸ்தூரி பச்சைக்கர்ப்பூரம் புனுகு சவ்வாது பன்னீர் இவை நிறைந்த" சந்தனக்குழம்பு, பன்னீர், தாராபாத்திரஜலம், பத்திரஜலம், சிருங்கஜலம், இரத்தினஜலம், தருப்பைஜலம், சங்கஜலம், ஸ்நானஜலம், விபூதி முதலிய அபிஷேகம்; வஸ்திரம், ஆபரணம், புஷ்பம் முதலிய அலங்காரம்; சுத்தான்னம், சித்திரான்னவகைகள், பணிகார வகைகள், கறியமுதுகள் முதலிய அறுசுவை நிவேதனம்; ஆராத்தி முதலிய உபசாரம்; அருச்சனை முதலியன செய்விப்போர் சண்டேசுவர பதம் பெறுவர்.

முற்குறித்த மூர்த்திகளின் திருச்சந்நிதியில் பசுநெய், எள்நெய், இருப்பை நெய் என்பவற்றுள் தனக்கியன்ற தொன்றைவார்த்துத் தாமரை நூல், வெள்ளெருக்க நூல், பருத்திநூல் என்பவற்றில் தனக்குக் கிடைக்கக் கூடியதில் எழிழைக்குக் குறையாமல் திரியிட்டுத் திருவிளக்கிடுவோர் சிவசொரூபம் பெறுவர்.

களந்தையில் பிறந்தவர் திருவாரூரிற் பிறந்தவரடையும் பதத்தையும், இறந்தவர் காசியிலிறந்தவரடையும் பதத்தையு மடைவர்.

களந்தைப் பதியைத் தரிசித்தவர் தில்லையைத் தரிசித்தவர் பெறும் பேற்றையும், நினைத்தவர் திருவருணையை நினைத்தவர் பெறும் பேற்றையும் பெறுவர்.

ஆதித்தேச்சுரர் கோவிலின் (கிழக்கு) சந்நிதியில் சூரியனுண்டுபண்ணிய சூரிய புஷ்கரணி தீர்த்தத்தில், தினமூழ்குவோர் ஞானத்தையும்; மாசப்பிறப்பு ஞாயிற்றுக்கிழமை அமாவாசியை கிரகணம் விதிபாதம் இரதசப்தமி அர்த்தோதயம் மஹோதயம் முதலிய புண்ணிய காலங்களில் மூழ்குவோர் கைலாசத்தையும் பெறுவர்.

கைலாசேச்சுரர் ஆலயத்தின் (கிழக்கு) சந்நிதியில் இந்திரனுண்டாக்கிய இந்திர தீர்த்தத்தில் தினமூழ்குவோர் எல்லாவிதப் பேற்றையும்; சித்திரைவிஷு ஐப்பசி விஷு உத்தராயணம் தக்ஷிணாயனம் விஷ்ணுபதி சடசீதிமுகம் சந்திரகிரகணம் சூரியகிரகணம் அமாவாசியை விதிபாதம் அர்த்தோதயம் மஹோதயம் முதலிய புண்ணிய காலங்களில் மூழ்குவோர் இந்திர போகத்தையுமடைவர்.

நாகநாதேச்சுரர் கோவிலின் (மேற்கு) சந்நிதியில் ஆதிசேஷனுண்டுபண்ணிய நாக தீர்த்தத்தில் தினமூழ்குவோர் ஞானத்தையும்; புண்ணிய காலங்களில் மூழ்குவோர் செல்வத்தையும் ; சிவராத்திரியில் மூழ்குவோர் குபேர பதத்தையும் பெறுவர்.

இத்தீர்த்தங்களை வெட்டிப் படித்துறை கட்டுவோர் இம்மையில் தனம் தானியம் புத்திரன் ஞானம் முதலியவற்றையும்; மறுமையில் இந்திர போகத்தையும் பெறுவர்.

திருச்சிற்றம்பலம்

# கூற்றுவ நாயனார் புராணம்

## திருச்சிற்றம்பலம்

சைவசமயந் தழைத்தோங்கற் பொருட்டுத் திருவவ தாரம் புரிந்து தமிழ் வேதமாகிய தேவார திருவாசக மருளிச்செய்த சமயகுரவரு ளொருவராகிய சுந்தர மூர்த்தி நாயனார்(சிவபெருமான் அடி யெடுத்துக்கொடுக்க) திருவாய்மலர்ந்தருளிய திருத்தொண்டத் தொகையினுள்

" ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோ னடியேன் "

எனவும், திருநாரையூர் பொல்லாப்பிள்ளையாருக்கு அமு தருத்திய சிவாநுபூதிச் செல்வராகிய நம்பி யாண்டார் நம்பி அப்பொல்லாப்பிள்ளையார் திருவருளா லருளிய திருத்தொண்டர் திருவந்தாதியினுள்

" நாதன் றிருவடி யேமுடி யாகக் கவித்துநல்ல
போதங் கருத்திற் பொறித்தமை யாலது கைகொடுப்ப
வோதந் தழுவிய ஞாலமெல் லாமொருகோ லின்வைத்தான்
கோதை நெடுவேற் களப்பாள னாகிய கூற்றுவனே "

எனவும் சைவசித்தாந்த சாத்திரோபதேசஞ் செய்தற் பொருட்டெழுந்தருளிய சந்தான குரவருளொருவரும், தில்லைவாழந்தணரு ளொருவரும் ஆகிய உமாபதி சிவாசாரியாரருளிய திருத்தொண்டர்புராண சாரத்தினுள்

“ குன்றாத புகழாளர் களந்தை வேந்தர்
கூற்றுவனார் மாற்றலர்மண் கொண்டு சூடப்
பொன்றாழு முடிவேண்டப் புலியூர் வாழும்
பூசுரர்கள் கொடாதகலப் புனித னீந்த
மன்றாடுந் திருவடியே முடியாச் சூடி
மாநிலங்காத் திறைவனுறை மாடக் கோயிற் † †
சென்றாசை யுடன்வணங்கிப் பணிகள் செய்து
திருவருளா லமருலகஞ் சேர்ந்து ளாரே.”

எனவும் திருவாவடுதுறை யாதீனத்துச் சிவஞான சுவாமிகள் அருளிச்செய்த திருத்தொண்டர் திருநாமக்கோவையுள்

“ விறற் களந்தைக் கூற்றுவனார் ”

எனவும், திருநாகேச்சுரஞ் சிவதலத்தில் அன்பு மிகுந்தவரும் ; தமது ஜெனன பூமியாகிய (தொண்டைநாட்டுக்) குன்றத்தூரிலே, ஒரு சிவாலயம் பிரதிஷ்டைசெய்து, திருநாகேச்சுர மெனப்பெயரிட்டு, நித்திய நைமித்திகங்களை வழுவாது நடத்துவித்தவரும் ; அநபாய சோழ மஹாராஜாவுக்குத் திருத்தொண்டர் திருவந்தாதிக்குப் பொருளுரைத்தவரும் ; அவ்வநபாய சோழ மஹாராஜாவின் வேண்டுகோளின்படி திருத்தொண்டர்களின் சரிதத்தை (பெருங்காப்பியமாகப்) பாடத் தொடங்கியபோது ஸ்ரீ சிவபெருமான் (உலகெலாமென்று) முதலடியெடுத்துக் கொடுக்கப் பெற்றவரும் ; அருண்மொழித் தேவரென்னுங்

† † ஆதித்தேச்சுரர் கோவில்

திருநாம முடையவருமாகிய சேக்கிழார் சுவாமிகளருளிச்
செய்த திருத்தொண்டர் பெரியபுராணத்துள்.

துன்னார் முனைக டோள்வலியால் வென்று சூலப் படையார்த
† நன்னா மந்தந் திருநாவி னாளு நவிலு நலமிக்கார்
பன்னா ளீச னடியார்தம் பாதம் பரவிப் பணிந்தேத்தி [வனார்.
முன்னா கியநற் றிருத்தொண்டின் முயன்றார் களாந்தை முதல்

அருளின் வலியா லரசொதுங்க
வவனி யெல்லா மடிப்படுப்பார்
பொருளின் முடிவு காண்பரிய
வகையாற் பொலிவித் திகல்சிறக்க
மருளுங் களிறு பாய்புரவி
மணித்தேர் படைஞர் முதன்மாற்றார்
வெருளுங் கருவி நான்குநிறை
வீரச் செருக்கின் மேலானார். (2)

வென்றி வினையின் மீக்கூர
வேந்தர் முனைகள் பலமுருக்கிச்
சென்று தும்பைத் துறைமுடித்துச்
செருவில் வாகைத் திறங்கெழுமி
மன்றன் மாலை மிலைந்தவர்தம்
வளநா டெல்லாங் கவர்ந்துமுடி
யொன்று மொழிய வரசர்திரு
வெல்லா முடைய ராயினார். (3)

---

† நன்னாமம்-பஞ்சாக்கரம்.

மல்லன் ஞாலம் புரக்கின்றார் மணிமா மவுலி புனைவதற்குத்
தில்லை வாழந் தணர்தம்மை வேண்ட வவருஞ் செம்பியர்தந்
தொல்லை நீடுங் குலமுதலோர்க் கன்றிச் சூட்டோ முடியென்று
நல்கா ராகிச் சேரலன்றன் மலைநா டணைய நண்ணுவார். (4)

ஒருமை யுரிமைத் தில்லைவாழந் தணர்க டம்மி லொருகுடியைப்
பெருமை முடியை யருமைபுரி காவல் பேணும் படியிருத்தி
யிருமை மரபுந் தூயவர்தாஞ் சேரர் நாட்டி லெய்தியபின்
வருமை யுறவான் மனந்தளர்ந்து மன்று ளாடுங் கழல்பணிவார்.()

அற்றை நாளி லிரவின்க ணடியேன் றனக்கு முடியாகப்
பெற்ற பேறு மலர்ப்பாதம் பெறவே வேண்டு மெனப்பரவும்
பற்று விடாது துயில்வோர்க்குக் கனவிற் பாத மலரளிக்க
வுற்ற வருளா லவைதாங்கி யுலக மெல்லாந் தனிபுரந்தார். (6)

அம்பொ னீடு மம்பலத்து ளாரா வமுதத் திருநடஞ்செய்
தம்பி ரானார் புவியின்மகிழ் கோயி லெல்லாந் தனித்தனியே
யிம்பர் ஞாலங் களிகூர வெய்தும் பெரும்பூ சனையியற்றி
யும்பர் மகிழ வரசளித்தே யுமையாள் கணவ னடிச்சேர்ந்தார்" (7)

எனவும் கூறப்பட்ட கூற்றுவ நாயனார் என்பவர் சோழ வளநாட்டிலே காவிரிநதிக்குத் தெற்கிலே திருக்களரிக்கு நிருதி திசையிலே ஒரு கூப்பிடு தூரத்திலேயுள்ள களந்தைப் பதியிலே குறுநிலமன்னர் மரபிலே திருவவதாரம் புரிந்தவர். களப்பாளன் என்னுந் திருநாமம் பெற்றவர். களந்தையைத் தன் பெயரால் (கோவிற்களப்பாள், துயிற்களப்பாள், அகரக்களப்பாள், பெரியகளப்பாள், நடுக்களப்

பாள், நறுவீழிக்களப்பாள், அகரநறுவீழிக் களப்பா ளென) ஏழு கூற்றாகப் பிரித்தமையால் கூற்றுவனெனும் பெயர் பெற்றார். இவர் "பிருதுவி தத்துவமாய் கந்தவிஷய மாய் வெண்ணிறமாய் பூமிமயமாய் நிவர்த்தி கலையாய் சத்தியோஜாதமாய் கர்மசாதாக்கியமாய் நான்முக ரூப மாய் சிருஷ்டியைத் தருகின்ற மறைப்பையுடைய திரை யெழுத்தாகிய **நகாரம்**, அப்புதத்துவமாய் ரசவிஷயமாய் கருநிறமாய் ஜலமயமாய் பிரதிஷ்டாகலையாய் வாமதேவ மாய் கர்த்துரு சாதாக்கியமாய் விஷ்ணுரூபமாய் திதி யைத் தருகின்ற மயக்கத்தையுடைய மலவெழுத்தாகிய **மகாரம்**, தேயுதத்துவமாய் ரூபவிஷயமாய் சிவந்த நிறமாய் அக்கினிமயமாய் வித்தியாகலையாய் அகோரமாய் மூர்த்தி சாதாக்கியமாய் உருத்திரசொரூபமாய் சம்மாரத்தைத்தரு கின்ற ஞான சூரியப்பிரகாசத்தையுடைய பதியெழுத் தாகிய **சிகாரம்**, வாயுதத்துவமாய் பரிசவிஷயமாய் புகை நிறமாய் காற்றுமயமாய் சாந்திகலையாய் தற்புருஷமாய் அமூர்த்தி சாதாக்கியமாய் மஹேசுவர ரூபமாய் திரோ பவத்தைத் தருகின்ற சத்தி வடிவத்தையுடைய பசையெழுத்தாகிய **வகாரம்**, ஆகாயதத்துவமாய் சத்த விஷயமாய் நீலநிறமாய் சுத்தவெளியாய் சாந்தியாதீத கலையாய் ஈசானமாய் சிவசாதாக்கியமாய் சதாசிவரூப மாய் அநுக்கிரகத்தைத் தருகின்ற சிவவடிவத்தையுடைய சிவவெழுத்தாகிய **யகாரம்** என்னும் அஞ்சாக்கரமாகிய

பஞ்சாக்கரத்தை இடைவிடாது உச்சரிப்பவர். "(1) சர்வசங்கார காலத்திலே ஸ்ரீ சிவபெருமான் தமது நெற்றிக்கண்ணெருப்பினாலே சகல பொருள்களையுஞ் சாம்பலாக்கி அச்சாம்பல் தமது திருமேனியில் தோயுமாறு நிர்த்தனஞ் செய்து முடிவில் முன்போல் உலகத்துள்ள யாவற்றையுந் தோற்றுவித்துத் தமது திருமேனியிற்படிந்திருந்த சாம்பலைத் தமகரத்தால் வழித்துத் தமது வாகனமாகிய இடபத்தின் முன் எறிய அந்த இடபம் அச்சாம்பலை யுட்கொண்டு தன் வீரியத்தைப் பசுக்களிடம் விட்டதனால் அப்பசுக்களின் சாணமாகிய கோமயம் திருநீற்றுக்கு மூலமெனவும்; (2) சாவசங்கார முடிவில் ஸ்ரீ சிவபெருமான் தமது நெற்றிக்கட் பொறியினாலே எல்லாத் தேவர்களையும் சகல அண்டங்களையும் நீறாக்கி அந்நீற்றைத் தமது திருமேனியிற் பூசிக்கொண்டு அதற் கறிகுறியாகச் சகல தேவர்களும் அவயவங்களில் வசிக்கப் பெற்ற பசுவின் சாணத்தைத் தரித்து யாவரும் பூசிக் கொள்ளும்படி விதித்தருளினரெனவும் கூறுவதால் ஈன்றணிமையதும், ஈனாததும், சூலுடையதும், இருகன்றீன்றதும், முதிர்ந்த கன்றுடையதும், கன்றிழந்ததும், நோயுடையதும், மலமும், மலந்தின்பதும், வளைந்த காதுள்ளதும், கொம்பொடிந்ததும், வாலற்றதும், கிழமுமாகிய இவைபோன்ற குற்றங்களில்லாது (வயலில்) செந்நெற்

ருள் மேய்ந்துவரும் * பசுக்களின் சாணத்தை மாசி பங்குனி மாதங்களில் வரும் அஷ்டமி, சதுர்த்தசி, பௌரணை என்னுந் திதிகளில் பூமியில் விழாமுன்னர் † சத்தியோஜாத மந்திரங் கூறித் தாமரையிலையில் வாங்கி வழும்பு நீக்கி † வாமமந்திரமோதி கோசலம் வார்த்து † அகோர மந்திரஞ் செபித்துப் பிசைந்து † தற்புருஷ மந்திரஞ் சொல்லிக் கைகொண்டவளவுண்டைசெய்து வெயிலில் உலர்த்தி ஓமத்தீயாகிய சிவாக்கினியிலிட்டேனும் பதர் அல்லது உமியோடு சம்பந்தப்படுத்தி அக்கினியிட்டேனும் தகித்து † ஈசானமந்திரமோதி யெடுத்துப் புது வஸ்திரத்தால் வடிக்கட்டிப் புதுப் பாண்டத்திலிட்டு † காயத்திரி மந்திரஞ் செபஞ்செய்து சுத்தமான இடத்தில் வைத்து அதனுள் மல்லிகை, முல்லை, பாதிரி, சிறுசண்பக முதலிய சுகந்த புஷ்பங்களைப் போட்டு அதன் வாயைப் புது வஸ்திரத்தினால் கவசஞ்செய்து வைத்துக்கொண்டு (மான்றோல், புலித்தோல், பட்டு முதலியவற்றில் பன்னிரண்டு விரல் உயரமும் எட்டுவிரல் அகலமும் வைத்துத் தைத்த) பைகள், சம்புடம், வில்வக்குடுக்கை என்பவற்றில் ஒன்றில் எடுத்து வைத்துச்சந்தியாகால மூன்றினும், சூரியோதயத்தினும், சூரியாஸ்தமயனத்தினும், ஸ்நா

---

* பசுக்களுக்கு காதறுத்தல் முதலிய துன்பஞ் செய்வோர் நரகத்தில் வீழ்வர். † இக்குறியிட்ட மந்திரங்கள் தெரியாதவர்கள் சிவ சிவவென்று செபிக்கவும்.

னஞ் செய்தவுடனும், பூசைக்கு முன்னும் பின்னும், போசனத்துக்கு முன்னும் பின்னும், நித்திரைக்கு முன்னும் பின்னும், மலசலமோசனஞ் செய்து சௌசம் பண்ணி ஆசமித்த பின்னும் வடக்கு அல்லது கிழக்குமுகமாக இருந்தேனும் நின்றேனும் வலக்கையால் எடுத்து நடுவிரல் மூன்றினாலும் நிலத்திலே சிந்தாவண்ணம் அண்ணாந்து சிவசிவசிவவெனச் செபித்துச் சிரசு நெற்றி முதலிய தானங்களில் உத்தூளனமாக வேணும்; சிவத்தியானத்துடன் வலக்கரத்தால் எடுத்து இடக்கரத்தில் வைத்து விதிப்படி சுத்திசெய்து சம்ஹிதா மந்திரத்தால் அபிமந்திரித்து நீரிற்குழைத்துச் சிரசிலோரங்குல நீளமும், நெற்றியி லிரண்டு கடைப்புருவ நீளமும், மார்பி லாறங்குல நீளமும், கொப்பூழ் முழந்தாள்களி லொவ்வோரங்குல நீளமும், புயங்களி லவ்வாறங்குல நீளமும், முழங்கைகள் மணிக்கட்டுகள் விலாப்பக்கங்கள் இந்தத் தானங்களி லொவ்வோரங்குல நீளமும், கண்டத்தில் அதன் சுற்றளவும் முறையே திரிபுண்டரமாகவேணும் தரித்துக்கொள்வோருக்கு ஐசுவரியத்தைத் தருவதால் பூதியெனவும், சிவத்துவத்தை விளக்குவதால் பசிதமெனவும், மலத்தைக் கழுவுவதால் சாரமெனவும், பேய்பிணியாதியவற்றால் வருந்துன்பங்களை நீக்குவதால் காப்பு எனவும், பாவங்களைத் தகிப்பதால்

நீறு எனவும் பெயர் பெறும் விபூதி * யும்".

"பொன், வெள்ளி இரும்பு என்னும் மூன்று லோகங் களால் மூன்று கோட்டைகளையுடைய (திரிபுரமென்னும்) மூன்று நகரங்களைச் செய்து அவற்றி லிருந்த தாரகன், தாரகாக்ஷன், வித்துன்மாலி யென்ற மூன்று அசுரர் களால் நிகழ்ந்த துன்பத்திற் காற்றாத விஷ்ணு, பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள் பரமேசுவரனை நோக்கி ஆயிரந்தேவ வருஷம் தவம்புரிந்து அங்கு எழுந்தருளிய பரமகருணாநிதியாகிய சிவபெருமான் றிருமுன்னிலையில் விண்ணப்பஞ் செய்துகொண்டபொழுது சிவபெருமா னுடைய இடக்கண்ணாகிய சந்திரவடிவ நேத்திரத்துதித்த நீர்த்துளிகளிற்றோன்றிய பதினாறுவித வெண்ணிற உருத் திராக்கமரங்களிலும், வலக்கண்ணாகிய சூரியவடிவநேத் திரத்துதித்த நீர்த்துளிகளிற்றோன்றிய பன்னிருவித செந்நிற உருத்திராக்க மரங்களிலும், நெற்றிக்கண்ணாகிய அக்கினிவடிவ நேத்திரத்துதித்த நீர்த்துளிகளிற் றோன் றிய பத்துவித கருநிற உருத்திராக்க மரங்களிலும் "தற் பரசிவனுக்குப் பிரீதியாகியதும், பிரமஹத்தி தீர்ப்ப தும், சிகையிலணிவதும், தினம் பூசிப்பதுமாகிய"

**ஒருமுகமணி.** "சீகண்ட பரசிவனுக்கும் சிவசத்திக்கும் பிரீதியாகியதும், கோஹத்தி நீக்குவதும், சிரசிலணி

* குருவின் முன்னும், சிவபெருமான் முன்னும், அக்கினி முன்னும் விபூதி அணியலாகாது.

வதுமாகிய" **இருமுகமணி**. "மும்மூர்த்திகளுக்கும் அக்கினிதேவனுக்கும் பிரீதியாகியதும், ஸ்திரீஹத்தி தவிர்ப்பதுமாகிய" **மும்முகமணி**. "பிரமதேவருக்குப் பிரீதியாகியதும், நரஹத்தி தொலைப்பதும், உதரத்திலணிவதுமாகிய" **நான்முகமணி**. "காலாக்கினியுருத்திரனுக்குப்பிரீதியாகியதும், புணரத்தகாதவர்களைப் புணர்ந்த பாவமும் புசிக்கத்தகாதவற்றைப் புசித்தபாவமும் போக்குவதும், செவியிலணிவதும், தினம் பூசிப்பதுமாகிய" **ஐம்முகமணி**. "சண்முகக் கடவுளுக்குப் பிரீதியாகியதும், பிரமஹத்தி நீக்குவதும், வலப்புயத்தி லணிவதுமாகிய" **ஆறுமுகமணி**. "ஆதிசேஷனுக்கும் சத்தமாதர்களுக்கும் பிரீதியாகியதும், பொன்திருடிய பாவமும் பசுஹத்தியும் போக்குவதும், செவியி லணிவதுமாகிய" **ஏழுமுகமணி**. "விநாயகக்கடவுளுக்கும் அஷ்ட வித்தியேஸ்வரர்களுக்கும் பிரீதியாகியதும், குருபத்தினியைப் புணர்ந்த பாவமும் பொன் திருடிய பாவமும் பிறரன்னங் கவர்ந்துண்டபாவமும், (துலாபுருடதானம், இரணிய கருப்பதானம், திலபதுமதானம், சொன்ன பூமிதானம், சொன்ன தேனுதானம், இலக்குமிதானம், திலதேனுதானம், சகத்திரகோதானம், இரணிய வசுவதானம், இரணிய கன்னிகாதானம், சொன்னக சதான முதலிய) தானங்கள் வாங்கிய பாவமும் தொலைப்பதும், கண்டத்தி லணிவதுமாகிய" **எண்முகமணி**. "வைரவமூர்த்திக்கும் கங்கைமுதலிய நவதீர்த்

தங்களுக்கும் பிரீதியாகியதும், ஆயிரம் உயிர்வதைப் பாவமும் நூறு பிரமவதைப் பாவமும் பூதப்பசாச பீடிதமும் சர்ப்பமுதலிய விஷதோஷமும் போக்குவதும், (அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவமென்பனவாகிய) அஷ்டமா சித்திகளும் முத்தியுங்கொடுப்பதும், இடப்புயத்திலும் மணிக்கட்டிலும் அணிவதுமாகிய" **ஒன்பதுமுகமணி.** "விஷ்ணுமூர்த்திக்கும் பத்துத்திக்குப் பாலகர்களுக்கும் பிரீதியாகியதும், நக்ஷத்திரதோஷம் கிரகதோஷம் விஷதோஷம் பேய்ப்பீடிதம் பூதப்பயம் பிரமராக்கதத்தீங்கு முதலியன தொலைப்பதும், காதிலணிவதுமாகிய" **பத்துமுகமணி.** "பதினொரு உருத்திரருக்குப் பிரீதியாகியதும், ஆயிரம் அசுவமேதப் பலனையும் நூறுவாசபேயப்பலனையும் இலட்சங்கோமேதப்பலனையும் அளிப்பதும், சிகையிலும் சிரசிலும் அணிவதும், தினம் பூசிப்பதுமாகிய" **பதினொருமுகமணி.** "பன்னிரு சூரியருக்கும் விஷ்ணுமூர்த்தியாகிய வாசுதேவர் முதலிய பன்னிரு மூர்த்திகளுக்கும் பிரீதியாகியதும், துன்பமும் மிருகபயமும் நீக்குவதும், அசுவமேதப்பலனையும் பசுமேதப்பலனையும் சுவர்ணதானப் பலனையும் இஷ்ட சித்தியையும் அளிப்பதும், செவியிலணிவதுமாகிய" **பன்னிருமுகமணி.** "சிவபெருமானுக்கும் சண்முகக் கடவுளுக்கும் சதருத்திரர்களுக்கும் பிரீதியாகியதும், மாதா பிதா சகோதரர் கரு

வாதியவற்றின் கொலைப்பாவம் போக்குவதும், சர்வா பீஷ்டத்தையும் சகல சித்தியையுங் கொடுப்பதுமாகிய" **பதின்மூன்று முகமணி.** "சிவத்துக்கும் சத்திக்கும் மனுக்களுக்கும் அசுவனி தேவதைகளுக்கும் பிரீதி யாகியதும், தேவர் முனிவர் முதலியோர்களை வசப் படுத்துவதும், சிவபதத்தைக் கொடுப்பதும், உபவீதத்தி லணிவதும், தினம் பூசிப்பதுமாகிய" **பதினான்கு முகமணி.** "சதாசிவமூர்த்தி சந்திரன் வருணன் முதலியோர்களுக் குப் பிரீதியாகியதும், தீங்களைத்து மகற்றுவதும், விஷ்ணு பிரமன் இந்திரன் முதலிஞோது பதவிகளிலுள்ள போக வின்பங்களைத் தருவதுமாகிய" **பதினைந்து முகமணி.** "சிவபெருமான் விஷ்ணுமூர்த்தி பிரமதேவர் முப்பத்து முக்கோடி தேவர்கள் முதலிய அனைவோருக்கும் பிரீதி யாகியதும், சாயுச்சிய முதலிய எல்லாவிதப் பேற்றையு மெளிதில் நல்குவதுமாகிய" **பதினாறு முகமணி.** "சிவ மும் சத்தியும் ஒன்றெனும் உண்மையை விளக்கும் வடிவு வாய்ந்ததாகிய" **கௌரிசங்கமணி** என்னும் பதினேழுவகை யாக (நேபாள தேசத்திலே) விளைகின்ற இம்மணிகளின் மூலம் பிரமதேவரும், நாளம் விஷ்ணு மூர்த்தியும், முகம் உருத்திர மூர்த்தியுமானதால், குடுமியில் ஒன்றும், தலையி லிருபத்திரண்டு அல்லது முப்பத்தாறும், காதுகளில் ஒவ்வொன்று அல்லது அவ்வாறும், உட்கழுத்தில் ஒன்று அல்லது மூன்றும், கழுத்தில் முப்பத்திரண்டும், புயங்

களில் தனித்தனி பதினாறும், கைகளில் தனித்தனி பன்னிரண்டும், மார்பில் நூற்றெட்டும், பூணூலில் ஒன்றும் (குடுமியும் பூணூலும் ஒழிந்த மற்றைய தானங்களில் அவ்வத்தானங்கொண்ட அளவும்) இருபத்தேழிழையாலாகிய வெண்பட்டு நூற்கயிறு, பருத்திநூற்கயிறு, பொற்கயிறு, வெள்ளிக்கயிறு என்பவற்றுளியன்றதொன்றில் முகத்தோடு முகமும் அடியோடு அடியும் பொருந்த இடை இடையே பொன், வெள்ளி, தாமிரம், முத்து, பவளம், பளிங்கு, வில்வக்குடுக்கையின் ஓடு இவைகளியன்றதொன்றை யிட்டுக்கோர்த்து நுனியிரண்டையுஞ் சேர்த்து அதில் முகமணி கோர்த்து முடியிட்டு (குடுமி காதுகள் உட்கழுத்து, பூணூல் இவற்றில் எக்காலத்திலும் மற்றையத்தானங்களில் சந்தியாவந்தனம், சிவமந்திர செபம், சிவபூசை, சிவத்யானம், சிவாலய தரிசனம், தேவார திருவாசகம் ஓதல், சிவபுராணம் படித்தல், சிவபுராணம் கேட்டல், சிவவிரதமிருத்தல், நீராடல், சிராத்தாதி தானம் கொடுத்தல், யாகாதியியற்றல் முதலியவை செய்யும் காலங்களிலும், அணிந்து கொள்வோருக்கு மூன்றரைக்கோடி புண்ணிய தீர்த்தங்களில் மூழ்கிய பலனையும், ஏழுகோடி மஹா மந்திரஞ் செபித்த பலனையும், அசுவமேதமுதலிய யாகங்கள் செய்த பலனையும், பஞ்சாக்கினி மத்தியிலிரிய தவம் புரிந்த பலனையுங் கொடுப்பது மன்றிப் பாசநீக்கமும் அருட்டன்மையும் முத்திப்பேறுந் தருத

லால் அக்கமெனவும் ; பாவங்களையுந் துன்பங்களையும் கண்டித்தலால் கண்டி அல்லது கண்டிகையெனவும், சிவபெருமானின் றிருக்கண்களிற் றோன்றிய நீர்த்துளிகளி லுற்பவித்தமையால் கண்மணியெனவும் பெயர்பெறும உருத்திராக்க*மும் ஆகிய" சிவசின்னங்களணிந்த சிவனடியார்கள்

"புலையரே யேனு மீசன் பொலன்கழ லடியிற புந்தி
நிலையரே லவர்க்குப் பூசை நிகழ்த்துத னெறியே யென்றுந்
தலையரே யெனினு மீசன் றமரைத் தாமி னேச
மிலரெனி லியற்றும் பூசைப பலந்தரு வாரே யாரே

வேறு

எள்ளற் படுகீழ் மக்களெனு மிழிந்த குலத்தோ ரானலும்
வள்ளற் பரமன் றிருநீறு மணியு மணிந்த மாண்பினரை [வே
யுள்ளத் துள்ளே யிருபோது முணர்ந்து தெருண்டு சிவனென
கொள்ளத் தகைய வறிவினரே பிறவிக் கடலிற் குளியாதார்.

வேறு

தேசிகர் தம்மைச் சிவநேசர் தம்மையு
மீசனென வேயுளத்து ளெண்."

என்றபடி. எத்தகையராயிருந்தாலும் அவர்களைக் கண்டவுடன், அவர்களுடைய சாதியையும் குணத்தையும் ஆராயாமல், அவர்களை மனிதரெனக்கருதாது பரம கருணை

* ஆயிரம் உருத்திராக்க மணிந்தவர் சிவ சொரூபமே யாவர்.

நிதியாகிய சிவபெருமானெனக் கருதி, இருக்கைவிட் டெழுந்து, அகமகிழ்ச்சியோடும், முகமலர்ச்சி யோடும், குவித்த கைகளையுடையராய் விரைந்து எதிர்கொண்டு, அவர்களுடைய திருவடிகளிலே விழுந்து நமஸ்கரித்து, இன்சொற்களைச்சொல்லி, வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்து, கரகநீர்கொண்டு, அவர்களுடைய திருவடிகளை விளக்கி, அத்தீர்த்தத்தைச் சிரமேற்றெளித்து உள்ளும் பருகி வீட்டிற்குள்ளும் புரோக்ஷித்து, அவர்களை ஆச னத்தில் இருத்தி, பத்திர புஷ்பங்களாலே பூசித்து, தூப தீபங்காட்டி, பூமியில் விழுந்து நமஸ்கரித்து, அவர்கள் விரும்பியவற்றை அன்போடு அளித்து, சரீரம் எடுத்தத னலே பெறும்பயனை இன்றன்றோபெற்றேனென்று சற்கார வசனஞ் சொல்லி, அவர்கள் போம்பொழுது, அவர்களுக் குப்பின், பதினன்கு அடிபோய் வழிவிட்டு, அவர்க ளுடைய உத்திரவு பெற்றுத் திரும்புவார். இவர் திரு வருள் வலியினலே பெருஞ் செல்வமுடையராகி யானை தேர் குதிரை காலாள் என்னும் நால்வகைச் சேனைகள் நிறைந்த வீரச்செருக்கில் மேலாயினர். பலவரசர்க ளோடு யுத்தஞ் செய்து, அவர்களை வென்று, அவர்க ளுடைய நாடுக ளெல்லாவற்றையுங் கவர்ந்து, அரசர் செல்வத்தில் முடிஒன்று தவிர மற்றவைக ளெல்லாவற் றையும் உடையராயினர். உலகத்தை ஆளுதற்குத் தமக்கு முடிசூட்டும்பொருட்டுத் தில்லைவாழந்தணர்களை

வேண்ட; அவர்கள் "நாங்கள் சோழ குலத்தாருக்கே யன்றி மற்றவர்களுக்கு முடிசூட்டோம்" என்று மறுத்து, தங்களுள் ஒருகுடியை முடியைக் காத்துக்கொள்ளும்படி யிருத்திச் சேரமண்டலத்துக்குப் போயினார்கள். கூற்றுவ நாயனார் ஐயுறவினாலே மனந்தளர்ந்து, ஸ்ரீ சபாநாயகரைப் பணிந்து, அற்றை நாளிரவிலே "எம்பெருமானே, அடியேனுக்குத் திருவடியையே முடியாகத் தந்தருளல் வேண்டும்" என்று பிரார்த்தித்துக் கொண்டு நித்திரை செய்ய; ஸ்ரீ சபா நாயகர் அவருக்குச் சொப்பனத்திலே தோன்றி தம்முடைய திருவடிகளை முடியாகச் சூட்டியருளினார். கூற்றுவநாயனார் அத்திருவடிகளையே முடியாகச்சூடி, பூமி முழுதையும் பொதுநீக்கி ஆண்டார். இவர் சிவபெருமான் எழுந்தருளி யிருக்கின்ற ஆதித்தேச்சரம், கைலாசேச்சரம், நாகநாதேச்சர முதலிய தலங்களெங்குஞ்சென்று வணங்கி, விடியற்காலம் காலசந்தி உச்சிக்காலம் சாயரட்சை இரண்டாங்காலம் அர்த்தயாமம் என்னுங் காலங்களில், அபிஷேகம் அலங்காரம் நைவேத்தியம் உபசாரம் அருச்சனை முதலியவைகள் வழுவாது நடாத்தும்படி செய்வித்து, ஆடிமாசத்துத் திருவாதிரை நட்சத்திரத்திலே சிவபதம்பெற்றார்.

இந்நாயனார் சிவபதம்பெற்ற திருநட்சத்திரத்திலே மத்தியானத்திலே, விபூதியணிந்தவர்கள், விபூதிருத்திராக்

கம் தரித்தவர்கள், விபூதிருத்திராக்கம் இலங்கோடு கௌபீன மணிந்தவர்கள், விபூதிருத்திராக்கம் இலங்கோடு கௌபீனங் காயசமுடையவர்கள், பஞ்சாக்கர செப நிறைந்தவர்கள், சித்தசுத்தி யடைந்தவர்கள், "இரண்டுங் கெட்டான் என்றபடி" நல்வினை தீவினை யென்னுமிருவினை யற்றவர்கள், "மூன்றும் போனானென்றபடி" ஆணவம் மாயை காமியம் அல்லது பொன்னாசை மண்ணாசை பெண்ணாசை யென்னும் மூன்றுந் தொலைந்தவர்கள், "நாலு முதிர்த்தானென்றபடி" மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் நான்கும் ஒழிந்தவர்கள், "ஆண்டிக்கு வாய்த்தது அஞ்சுங் குருடாச்சு என்றபடி" மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் பஞ்சேந்திரியங்கள் கெட்டவர்கள், "பாலர் பித்தர் பேயர் என்றபடி" சிறுவர்களைப் போலவும் பயித்தியங் கொண்டவர்களைப் போலவும் பேய் பிடித்தவர்களைப் போலவும் நடிக்கின்றவர்கள் முதலிய அடியார்களை, மனிதரெனக் கருதாது, சச்சிதாநந்த பரஞ்சோதியாகிய சிவபெருமானென நினைத்து, அவர்களுடைய திருவடிகளில் விழுந்து நமஸ்கரித்து.

"கொண்டு வந்து மனைப்புகுந்து குலாவு பாதம் விளக்கியே
மண்டு காதலி னாத னத்திடை வைத்த ருச்சனை செய்தபின்
உண்டி நாலு விதத்தி லாறு சுவைத்தி றத்தினி லொப்பிலா[ளார்"
அண்டர் நாயகர் தொண்ட ரிச்சையி லமுது செய்ய வளித்து

என்றபடி சுத்த ஜலங்கொண்டு, அவர்களுடைய திரு

வடிகளை விளக்கி, அத்தீர்த்தத்தைத் தன் சிரசின்மேற் றெளித்து உள்ளும் பருகி, அவர்களுடைய திருவடிகளை மெல்லிய வஸ்திரத்தினால் மெதுவாகத் துடைத்து, அவர்களை ஆசனத்தில் உட்காரவைத்துச் சிவபெருமானுக்குரிய சுகந்த புஷ்பங்களாலும் வில்வ முதலிய பத்திரங்களாலும் பூசித்து, தூபதீபங்காட்டி, பூமியில் விழுந்து நமஸ்கரித்து, பசுவின் சாணத்தினால் மெழுகிச் சுத்தஞ் செய்த இடத்தில், கூற்றுவ நாயனாருடைய திருவுருவப் படத்தை வைத்து, புஷ்பம் முதலியவைகளினால் அலங்காரஞ் செய்து, பசு நெய் அல்லது எள் நெய்யில், தாமரைநூல் அல்லது பருத்திநூல் திரியிட்டுத் தீபமேற்றி, வெற்றிலை பாக்கு வாழைப்பழம் முதலியன வைத்து, தேங்காயுடைத்து வைத்து, தூபதீபங்காட்டி, கூற்றுவ நாயனாருடைய சரித்திரத்தைப் படித்து, அறுசுவை நிவேதனம் புரிந்து, தூபதீபங்காட்டி, வரிசையாக நுனியையுடைய வாழையிலையில், கைப்பு புளிப்பு தித்திப்பு துவர்ப்பு கார்ப்பு உவர்ப்பு என்னும் அறுவகை சுவையையுடையனவாய் உண்ணப்படுவது தின்னப்படுவது நக்கப்படுவது பருகப்படுவது என நால்வகைப்படும் உணவுகளைப் பரிமாறி, அவ்விலைகளுக் கெதிரில், அடியார்களை உட்காரவைத்து, அவர்களுடைய திருநெற்றிகளில் சந்தனமும் சிரசுகளில் சுகந்த புஷ்பங்களுஞ் சாத்தி, நீர் மாற்றி, தூபதீபங்காட்டி, திரும்ப நீர்

மாற்றி, ஒரு கடைசியில் போய் நின்று, அடியார்களை நோக்கி, பூமியில் விழுந்து நமஸ்கரித்து, எழுந்து கைகளை கூப்பிக்கொண்டு நின்று, சுவாமிகள் திருவமுது செய்தருளல் வேண்டுமெனவிண்ணப்பஞ் செய்து, அவர்கள் விருப்பமுடன் உண்ணும் பதார்த்தங்களைக் கவனித்து அன்போடு அளித்து, அவர்கள் அமுது செய்தருளிய பின்பு, அவர்களைச் சுத்தமான இடத்தில் இருத்தி, சந்தனம் புஷ்பம் வெற்றிலை பாக்கு தட்சணை என்பவற்றோடு விபூதி நிறைந்த பட்டுப்பை உருத்திராக்கம் இலங்கோடு கௌபீனம் வஸ்திரம் திருவோடு பாதுகம்விசிறி சாஸ்திரப் புத்தகங்கள் முதலியவற்றுள் தனக்கியன்றதையும் கொடுத்து, விழுந்து நமஸ்கரித்து எழுந்து ஒடுக்கமாக நின்று, அவர்கள் அளிக்கும் விபூதிப் பிரசாதத்தை இடக்கரத்தின் மேல் வலக்கரத்தை வைத்து வாங்கித் தரித்துக்கொண்டு, விழுந்து நமஸ்கரித் தெழுவோர் இவ்வுலகத்தில் வீரத்தையும் வெற்றியையும் செல்வத்தையும் பெறுவர்; அவ்வுலகத்தில் முத்தியையடைவர்.

திருச்சிற்றம்பலம்

களப்பாள் சிவக்ஷேத்திர விளக்கம் முற்றிற்று